21st March 1961]

*Cases of change of sex*

* 971 *Q.*—SRI A. VEDARATHNAM (on behalf of SRI A. A. RASHEED) : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether any cases of change of sex have been registered in any of the Government Hospitals in the State in 1959–60?

THE HON. SRI M. A. MANICKAVELU : One case of change of sex was brought to the out-patient Department of the Government Hospital, Karur (Tiruchirappalli district) during September 1960.

SRI A. VEDARATHNAM : தயவுசெய்து இதனுடைய விவரத்தை விளக்க முடியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்பொழுது இந்த விவரங்களையெல்லாம் சொல்லுவது அவ்வளவு உசிதமாகத் தோன்றவில்லை. கனம் அங்கத்தினர் அவர்கள் என்னிடம் வந்தால் அதைப்பற்றி நான் அவர்களுக்குச் சொல்லுகிறேன். (சிரிப்பு.)

SRI V. K. KOTHANDARAMAN : ஆணும் பெண்ணும் இல்லாத அலிகளை பெண் வார்டில் அனுமதிக்கப்பட்ட கேஸ்கள் எங்கெங்கே என்பதை அறிய முடியுமா ? அதுபற்றி சர்க்காருக்கு புகார் வந்திருக்கிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த சமாசாரம் ஆண் பெண்ணாக மாறுவது அல்லது பெண் ஆணாக மாறுவது பற்றிய விசித்திரம்.

*Misappropriation (Bodinaickkanur Cardamom Co-operative Society)*

* 972 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லா போடிநாய்க்கனூர் ஏலக்காய் கூட்டுறவு சங்கத்தில் மோசடிகள் நடந்ததாக புகார் வந்ததா ?

(இ) அது சம்பந்தமாக போலீஸ் புலன் விசாரணை என்னவாயிற்று?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) No, Sir.

(இ) Does not arise.

SRI N. R. THIAGARAJAN : ஏலக்காய் கூட்டுறவு சங்கத்திலிருந்து ரூ. 10 லட்சத்திற்கு மேல் விற்பனை வரி மட்டும் மோசடி நடந்துள்ளதாக திட்டவட்டமாக கேள்விப்படுகிறேன். அதாவது உண்மையா ?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் அந்த விதமான புகார் பற்றிய எல்லா விவரங்களையும் எழுதி அனுப்பினால், சர்க்கார் அதைப் பரிசீலனை செய்யும்.

*Malaria (eradication)*

* 973 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) அமெரிக்க சர்க்கார் இந்திய சர்க்காருக்கு மலேரியா ஒழிப்பிற்காக கொடுத்த ரூ. 49 கோடியில் நம் மாநிலத்திற்குக் கிடைத்த தொகை எவ்வளவு ?

(இ) அத்தொகை மூலம் என்னென்ன திட்டங்கள் மேற்கொள்ளப் பட்டிருக்கின்றன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) Rs. 94,32,809.

(இ) A statement[a] is placed on the table of the House.

---

[a] Printed as Appendix III on pages 275–276 infra.